Regd. M. 2330

உ

சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியைஉள் நாடு



மலர் 28 | மன்மத ஆவணி 1955 ஆகஸ்ட் | இதழ் 8

## இருஞானியர் பெருமறைவு

பத்திராசிரியர்

சிறந்த சிவஞானச் செல்வர்கள் இருவர் சிவபதமடைந்து, நமக்குப் பெரு நஷ்டம் விளைவித்தனர். ஒருவர் மாதவச் சிவஞான யோகிகள் தாய்வழித் தோன்றல் திரு. கே. ஏ. சிவஞானம் பிள்ளை, மற்றையவர் யாழ்ப்பாணம் பண்டிதர் திரு. ம, வே. திருஞானசம்பந்தம் பிள்ளை, இவ்விருவரும் சிறந்த தமிழறிஞர்கள், சைவ ஞானிகள், சமயத்தொண்டர்கள், எமது உயிரனைய நண்பர்கள், இருபதாண்டுகட்கு மேலாகப் பல வழிகளில் எம்முடன் நெருங்கிய தொடர்புடையவர்கள். இவர்கள் முறையே 27-6-1955, 20-7-1955 நாட்களில் ஈசன் எந்தை இணையடி நீழலெய்தினர்.

திரு. சிவஞானம் பிள்ளையவர்கள் சமாஜத்தினிடத்திலும் அடியேனிடத்திலும் அளவுகடந்த நட்பும் பற்றும் உடைய பெரியார். பற்பல ஆண்டுகள் நான் நெல்லை மாவட்டம் செல்லுங்கால், எல்லையிலேயே கனிந்த அன்போடு என்னை வரவேற்று, உடனிருந்து அளவளாவி, தமது விருந்தினனாக உபசரித்து, அறிவு நிரம்பிய உரையாடல் செய்து

மகிழ்விப்பர். தென் திருவிதாங்கூரிலுள்ள நெய்யூர் ஆஸ்பத்திரியில் பிரபல சஸ்த்ர சிகிச்சை நிபுணர் (Surgeon) சாமர்வெல் என்பவருக்கு என்னை ஒப்பிட்டு, அவர் செய்வது உடல் வைத்தியம், நான் செய்வது உயிர் வைத்தியம் என்று கூறி உள்ளம் பூரிப்பர். 1944 ம் ஆு நமது சமாஜம் நடத்திய கோடை வகுப்புக்குப் பற்பல உதவிகள் செய்து உடனிருந்து நடத்திவைத்தவர் இப்பெரியார். இவர் வரலாற்றுச் சுருக்கத்தை இவ் விதழில் மற்றோரிடத்தில் காண்க.

திரு ம. வே. திருஞானசம்பந்தம் பிள்ளையவர்கள் உரையாசிரியர் ம. க. வேற்பிள்ளையின் புதல்வர், சைவப் பேரறிஞர் சிவபாத சுந்தரம் பிள்ளையின் மருகர், யாழ்ப்பாணம் இந்துக் கல்லூரியின் தமிழாசிரியர், நாற்பது ஆண்டுகளாக (1912-1952) "இந்து சாதனம்" பத்திரிகையின் உயிர் நாடியாகப் பணி செய்தவர், யான், 1934, 1948-ம் ஆண்டுகளில் யாழ்ப்பாணம் சென்றபோது உடனிருந்து நண்பராக அளவளாவியவர், இனிமையாகவும் நகைச்சுவையோடும் சொற்பொழிவாற்றும் திறம்பெற்றவர், புரிசை முருகேச முதலியார் போன்ற பெரியார்களை வரவழைத்துச் சைவமும் தமிழும் ஈழநாட்டில் தழைக்கச் செய்தவர். இவர் சிவபதமடைந்த முறை பெரிதும் வியக்கத்தக்க, விரும்பத்தக்க, அநாயாச முறையாகும். 18-7-55-ல் மாவட்டபுரம் சென்று தேர்த்திருவிழா தரிசித்தார், 19-7-55-ல் வண்ணார்ப்பண்ணைச் சிவாலயத்தில் சமயச் சொற்பொழிவாற்றினார், 20-7-55 காலையில் வழக்கம்போல் திருநீறணிந்து இறைவனை யிறைஞ்சி நிற்கும் வேளையிலேயே உயிர் நீத்தார்.

சிறந்த ஞானிகளாகிய இவ்விருவர் ஆன்மாக்களும் சிவபெருமான் திருவடிகளில் இரண்டறக் கலந்து என்றென்றும் இன்புற்று நிலவுக.

---

# என் தாத்தா (சிவஞானம் பிள்ளை)

மு. சிதம்பரத்தம்மாள்

மரபு:—பொன் திணிந்த புனல் பெருகும் பொருநை யாற்றங்கரையில் புலவர் பாடும் புகழமைந்த பொதிகை மலைச்சாரலில் சிறப்புற்று விளங்குவது சிங்கை. அதை விக்கிரம சிங்கபுரம் என நாமணக்க நவில்வர். அப்பதியில் சைவ வேளாளர் மரபில் தோன்றினர் சிவஞான மாபாடியப் பேராசிரியரும். வட மொழியும், தென் மொழியும் ஒருங்கு பயின்றவருமான மாதவச் சிவஞான முனிவர்.

பிறப்பும் இளமையும்:—அன்னர் தாய்வழி மரபில் வந்த திரு. அனந்த கிருஷ்ணக் கவிராயர் நெல்லை இந்துக் கல்லூரித் தமிழ் ஆசிரியராகப் பணியாற்றினர்கள். அவர்கள் துணைவி முத்தம்மாள். இவர்கள் மூத்த மகனாகத் தோன்றிய திரு நமசிவாயம் பிள்ளை கொல்லம் மாவட்டப் பதிவாளராகப் (District Registrar) பணியாற்றினர்கள். அன்னர் இளவலாகக் கொல்லம் 1055-ம் ஆண்டு (கி. பி. 1880 வைகாசித் திங்கள் 5ம் நாள் என் தாத்தா திரு. சிவஞானம் பிள்ளை தோன்றினர்கள்.

இளமையில் இந்துக் கல்லூரியில் கல்வி பயின்ருர்கள். விக்ரமசிங்கபுரத்தில் தமது பரம்பரை வேலையாகிய கிராம முன்சீப் பணியை மூன்று ஆண்டுகள் ஏற்றுச் செவ்வனே நடத்தினர்கள். அவர்கள் திறமை, ஆங்கில அறிவு, பண்பு இவற்றைக்கண்ட நெல்லை மாவட்டக் கலெக்டர் மிகவும் பாராட்டி தம் அலுவலகத்தில் எழுத்தாளர் (Clerk) வேலை கொடுத்துப் பெருமைப் படுத்தினர். மூன்று ஆண்டுகள் முடிந்த பின்னர் வழக்கறிஞராதற்குரிய சட்ட நூல்களைப் பயின்று கி. பி. 1906-ம் ஆண்டு வழக்கறிஞராகப் பதிவு செய்து கொண்டார்கள்.

குடும்ப வாழ்க்கை:—37 ஆண்டுகளாக அம்பாசமுத்திரத்தில் தமது தொழிலைத் திறம்பட நடத்தி வாழ்க்கையில் மாபெரும் வெற்றியடைந்தார்கள். அன்னர் வாழ்க்கைத் துணைவி களக்காடு திரு. சிவசுப்பிரமணிய பிள்ளையின் செல்வி சிதம்பரத்தம்மாள், என் ஆச்சியாவாள். இவர்கள்

இல்வாழ்க்கையின் நன்கலமாக ஒரு ஆண் மகனும் மூன்று பெண் மக்களும் தோன்றினர். திரு. கே. எஸ். அனந்த கிருஷ்ண பிள்ளை, பி. எ., எல். டி. என் அருமைத் தந்தை. ஏனைய மூவர் என் அத்தைமார் திரு. மைலம்மாள், முத்தம் மாள், சங்கரியம்மாள் ஆவர். என் அருமைத் தாய் நெல்லை திரு. வ. கா. மீனாட்சிசுந்தரம் பிள்ளையின் அருமைப் புதல்வி திரு. காந்திமதி அம்மாள், என் அத்தை மயிலம் மாளை, அம்பை நிலக்கிழாரும், தீர்த்தபதி உயர்நிலைப்பள்ளி ஆட்சிக்குழுவின் தலைவருமான திரு. தெ. மரகத சுப்பிர மணிய பிள்ளை அவர்களுக்கும், முத்தம்மாளை, சென்னை அறநிலையப் பாதுகாப்புக் கழக ஆணையாளர் திரு. டி. கே. சங்கரவடிவேலுப் பிள்ளை ஐ. எ. எஸ்., அவர்களுக்கும், சங்கரியம்மாளை, விக்கிரமசிங்கபுரம் ஹார்வி மில் இஞ்சி னியரிங் சூப்பர்வைசர் திரு. என். எஸ். நல்லபெருமாள் பிள்ளை அவர்களுக்கும் திருமணம் செய்யப்பட்டுச் சீரும் சிறப்புமாக வாழ்க்கை நடத்துகின்றனர். கி. பி. 1945-ம் ஆண்டு மே மாதம் 6-ம் நாள் என் அருமைத் தந்தை, 14 வயது நிரம்பாத என்னையும், என் தம்பி சிவஞானத்தை யும், மீனாட்சிசுந்தரத்தையும் கண்ணீர் சோர விட்டுவிட்டு இறைவன திருவடி நிழல் அடைந்துவிட்டார்கள். என் தம்பிமாரும், நானும் அருமைத் தாத்தா ஆதரவிலும், என் தாயார் அரவணைப்பிலும் வளர்ந்து வந்தோம்.

பொதுவாழ்க்கை:—தாத்தா அவர்கள் வழக்கறிஞராக வேலைபார்த்த காலத்தில் சமயப்பணி, சமூக முன் னேற்றம், அரசியல் துறை, இவைகளில் பெரிதும் ஈடு பட்டுத் தொண்டாற்றியுள்ளார்கள். அறநிலையப் பாது காப்புக் கழகத்தில் நெல்லை மாவட்ட உறுப்பினராகப் பத்து ஆண்டுகள் சமயப்பணி புரிந்தார்கள், சிவஞான மாபாடி யத்தை முதற்கண் அச்சேற்றிய பெருமை தாத்தா அவர் களையே சாரும். சமயத் துறையில் பல்வேறு சிறு நூல்களை யும் அச்சிட்டுள்ளார்கள். பாபநாசம் திருக்கோவில் அறக் காப்பாளராக இருந்து குடமுழுக்கு விழாவை மிகச் சிறப் பாக நடத்திப் பெருமையடைந்தார்கள். இச்சிறப்பை அத்திருக்கோவில் கல்வெட்டு பகரும். வேளாளர் கல்வி அபிவிருத்திச் சங்கம் தோற்றுவித்து, அதற்குவேண்டிய பொருள் பல ஈட்டிச் சமூக மக்களுக்குப் பல்லாற்றானும்

உதவி புரிந்துள்ளார்கள். தீர்த்தபதி உயர்நிலைப்பள்ளி ஆட்சிக்குழுவில் தொடர்ந்து 27 ஆண்டுகள் உறுப்பினராக வும், செயலாளராகவும் தலைவராகவும் இருந்து பள்ளியின் முன்னேற்றத்துக்கு அரும்பாடுபட்டார்கள். தாத்தா அவர் களின் உதவி பெற்றுக் கல்வி பயின்ற மாணவர்களில் பல்லோர் இற்றைக்கு உயர்நிலை எய்தி இருக்கின்றார்கள். ஏழைகளுக்கு அறிவு கொடுத்த பெருமை தாத்தாவுக்கே உரியது. இல்லையென்று வந்தவர்க்கு இல்லை என்னாது ஈயும் அருள் உள்ளம் படைத்தவர்கள்.

சேரமாதேவி தாலுகாக் கழகத் தலைவராகவும், உதவித் தலைவராகவும், நெல்லை மாவட்டக்கழக உறுப்பினராகவும் இருந்து 22 ஆண்டுகள் அரசியல் துறையில் செயலாற்றி யுள்ளார்கள். கல்வி, சுகாதாரம், மருத்துவம் இவைகளில் தன்னலம் கருதாது பொதுநலம் கருதி மக்களுக்குப் பேருதவி செய்துள்ளார்கள்.

இறுதிக்காலம்:—மாமா திரு. டி. கே. சங்கரவடிவேல் பிள்ளை அவர்களின் அருமைப் புதல்வி பருவதவர்த்தினிக் கும் என் தம்பி சிவஞானத்திற்கும் 1955–ம் ஆண்டு மே 23-ம் நாள் நடந்தேறிய திருமணம் தாத்தா அவர்கட்கு மிகுந்த மன அமைதியையும் பெருமகிழ்ச்சியையும் நல் கியது.

என்னையும், என் தம்பி சிவஞானத்தையும் அன்போடு வளர்த்த என் தாத்தா 1955-ம் ஆண்டு ஜூன் மாதம் 27-ம் நாள் இரவு 10 மணிக்கு இறைவன் திருவடி நீழல் அடைந் தார்கள். வாழ்க அன்னார் புகழுடல்.

“ ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்ல (து)
ஊதியம் இல்லை உயிர்க்கு ”

என்ற வள்ளுவர் வாய்மொழிக்கேற்ப வையத்து வாழ் வாங்கு வாழ்ந்த உத்தமர் என் தாத்தா. அவர்களின் உயிர் இறைவன் பேரொளியில் ஒன்றி அமைதிபெற எல்லாம் வல்ல இறைவனை இறைஞ்சுகின்றோம்.

——

# ஆமையும் அரசரும்

ஆர். பஞ்சநதம் பிள்ளை

ஆமை ஓர் அதிசயப்பிராணி, நீரில் திளைத்தாடுவது. இதற்கு நான்கு கால்களும், ஓர் சிறு தலையும் ஆகிய ஐந்து உறுப்புக்கள் உண்டு. இது சமயங்களில் ஐந்து உறுப்புக்களையும் அடக்கிக்கொள்ளும். இதனால் இதற்கு ஐந்தடக்கி என்றும் பெயருண்டு. இது தன் உறுப்புக்களை அடக்கிக் கொண்டிருக்கும்போது ஒரு கல் போல் காணப்படும். அப்போது நண்டு அதன்மேல் தூங்குமாம். இதை "ஆமை முதுகில் அலவன் துயில் கொள்ளும் காமர் நெடு நாடு" என்று நளவெண்பா கூறுகிறது. இதன் ஓட்டினை மேஜைக் கருவியாகவும் உபயோகிப்பர்.

இதன் மூலம் அறிஞர்கள் பல நீதிகளைக் காட்டியிருக்கிறார்கள். மனிதர்களுக்குப் பஞ்சேந்திரியங்களாகிய ஐம்பொறிகள் உண்டு. இவை மனத்தை நல்வழியிற் செல்ல ஒட்டாதபடி வளைத்துத் துன்பஞ் செய்யும் தன்மைய. இவைகளின் துன்பங்களுக்காற்றாமல் சான்றோர்களும் தடுமாற்றம் அடைந்திருக்கிறார்கள். மனதின் வழியே செல்லவேண்டிய இந்திரியங்கள், மனதைத் தம் வசமாக்கி ஆட்டுவிக்கின்றன. "அரிச்சிராப்பகல் ஐவரால் ஆட்டுண்டு" என்கிறார் அப்பர், "எறும்பிடை நாங்கூழ் எனப்புலனால் அரிப்புண்ட தமியேனை" என்கிறார் மணிவாசகர். ஆமை புகுந்த வீடும், அமீனா நுழைந்த வீடும் உருப்படாவென்பர். இந்தப் பொறிகளாகிய ஆமை புகுந்த உடல் வீடும் நலமுறாது. இத்தன்மையான இந்திரியங்களை ஆமையைப்போல் அடக்க முயலவேண்டும். ஆமை ஐந்து உறுப்புக்களையும் அடக்கிக் கொள்வதுபோல, மனிதனும் ஐந்து பொறிகளையும் அடக்க வேண்டும். அடக்குதலாவது பொறிகளைத் தீநெறியிற் செல்லாமல் தடுத்து நல்வழியில் செலுத்துதல். ஒருவன் அவ்விதம் அடக்கவல்லவனாகில் அவனுக்குப் பல பிறப்பிலும் நன்மையுண்டு. இதை "ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின் எழுமையும் ஏமாப்புடைத்து" என்று திருவள்ளுவர் காட்டுகிறார்.

சொற்குறுதிக்கு அப்பராகிய திருநாவுக்கரசரும் ஓர் ஆமையின் நிலைமையைக் கண்டார். வேடர்கள் ஓர் ஆமையைப் பிடித்துப் பாத்திர நீரில் போட்டு உலையை ஏற்றித் தீ மூட்டினார்கள். குளிர்ந்த நீரிலேயே வசித்த ஆமை, சிறிது சூடேறியவுடன் தன்னையறியாமலே களிப்புக்கொண்டது. ஓர் புதுமையான இன்பத்தைக் கண்டது. இந்த இன்பமே துன்பமாக மாறித் தன்னைக் கொல்லப்போவதை உணரவில்லை. அங்குமிங்கும் திளைத்தாடியது. சூடு ஏற ஏற ஆட்டமும் நின்றது. விரைத்துப் போய்விட்டது. முதலில் இன்பமாகத் தோன்றிய வெப்பநீர், தனது உயிரைப் போக்கும் உலைநீர் ஆயிற்று. இதைக்கண்டார் நமது நாவரசர். தாமும் இந்நிலையிலிருப்பதாக உணர்ந்தார். ஐந்து இந்திரியங்களாகிய கள்வர் தம்மை வசப்படுத்தி நடுக்கம் செய்வதையும், தெளிவில்லாமல் ஆமை மயக்கங்கொண்டு விளையாடியதுபோல, அவைகளின் நடுவில் இருந்துகொண்டு களியாட்டங் கொள்வதையும், சூடேறிய நீரில் வெளிவர முடியாத நிலையில் உயிர்விட்ட ஆமையைப்போல, தாமும் இந்திரியங்களின் மத்தியில் அகப்பட்டுத் துன்பப்படுவதையும் உணர்ந்து முறையிட்டு நாவரசர் ஓர் பாடலில் கூறுகின்றார்.

‘ வளைத்து நின்றைவர் கள்வர் வந்தென்னை நடுக்கஞ் செய்யத்
தளைத்து வைத்துலையை யேற்றித் தழலெரி மடுத்த நீரில்
திளைத்து நின்றாடுகின்ற ஆமைபோல் தெளிவிலாதேன்
இளைத்து நின்றாடுகின்றேன் என் செய்வான் தோன்றினேனே.’’

இதே கருத்தைச் சமணர்கள் இயற்றிய நாலடியாரில் ‘‘கொல்லை உலையேற்றித் தீமடுப்ப ஆமை நிலையறியா தந்நீர் படிந்தாடி யற்றே’’ என்று கூறப்பெற்றுள்ளது. இந்திரிய வசப்பட்டு அழிந்துபோகும் நிலையை மாணிக்கவாசகர் ‘‘இந்திரிய வயமயங்கி இறப்பதற்கே காரணமாய் அந்தரமே திரிந்துபோய் அருநாகில் வீழ்வேற்கு’’ என்று கூறுகிறார், உலக வாழ்க்கையில் பெரும்பாலாக இந்திரிய ஆமையே வெற்றி பெறுகிறது. முயலும் ஆமையும் என்ற கதையிலும் ஆமையே வெற்றி பெற்றது.

நாவரசர் ஆமையின்மூலம் மற்றோர் உண்மையைக் காட்டுகிறார். ஒரு கிணற்றாமை, கடலாமையைச் சந்தித்த

தாம். கிணற்றுமை கடலாமையைப் பார்த்து கடலானது கிணற்றைப் போலிருக்குமோ என்று கேட்டதாம். கடலையே பார்க்காத கிணற்றுமை, தான் வசிக்கும் இடமே பெரிதெனக் கருதியது. அதுபோலக் கருணைக்கடலான தேவதேவனின் பெருமைகளைப் பாவகாரிகள் தெரிந்து கொள்ளமாட்டார்கள். இந்தக் கருத்துக்களை நாவரசர் ஒரு பாடலில் காட்டுகிறார்.

"கூவ லாமை குரைகட லாமையைக்
கூவலோ டொக்குமோ கடல்என்றல் போல்
பாவ காரிகள் பார்ப்பரி தென்பரால்
தேவ தேவன் சிவன்பெருந் தன்மையே."

---

# மூர்க்கையால் உலகாண்ட மூர்த்தி

G. S. ராஜன்

தமிழ்நாட்டிலே முதன்மையான பாண்டியநாடு, பல வகைச் சிறப்புக்களும் பெற்றது. செல்வம்மிக்க மக்கள் பலர் அந்நாட்டில் வாழ்ந்துவந்தனர். அந்நாட்டிலே மதுராபுரி என்பது சிறப்பு மிக்கதோர் நகரம். சங்கம் வைத்து, தமிழ் வளர்த்த பெருமை மதுரைக்கே சாலும், பொற்பதி எனத் தகும் அம்மதுரையிலே பழமை மிக்க, பெருமைசான்ற வணிகர் வசித்துவந்தனர். அன்னார் சிவனார் தாளையே பற்றி வாழ்பவர். அவ்வணிகக் குடியிலே சீலம்மிக்க தாய் தந்தையர்க்கு உதித்தவர் மூர்த்தி என்பவர்.

இவரும் ஆலவாயுடையாரிடம் அளவற்ற அன்பு பூண்டவர். அச்சிவனுக்கு அனுதினமும் நறுமணம் மிக்க சந்தனம் தேய்த்து சந்தனக்காப்பு திருப்பணி செய்துவந்தார். இவ்வாறிருக்கும் நாளில் வடுகக் கருநாடர் மன்னன், நால்வகைப் படையினருடன் தென்திசை நோக்கிவந்து பாண்டிநாட்டைக் கைப்பற்றி மதுரையிலிருந்து அரசாளத் தொடங்கினான். அவன் அமண் சமயஞ் சார்ந்து, சைவ சமயத்தின்பால் வெறுப்புக்கொண்டு சிவனடியார்களுக்கு அல்லல் பல விளைவித்துவந்தான். ஆயினும் மூர்த்தியார் தம் முறைமைப் பணியை முட்டின்றிச் செய்து வந்தார்.

" தந்தம் பெருமைக் களவாகிய சார்பில் நிற்கும்
எந்தம் பெருமக்களை யாவர் தடுக்கவல்லார் "

என்பது ஆன்றோர் வாக்கன்றோ?

ஆனால், கொடுங்கோன்மை மிக்க அவ்வரசன் மூர்த்தியார் சந்தனம்பெறுவண்ணம் தடைசெய்துவிட்டனன். எங்கும் அலைந்து திரிந்தார் மூர்த்தி, சந்தனந்தேடி. எங்குமே கிடைக்கவில்லை. மனந்தளர்ந்த அடியார் ஆலவாயான் ஆலயம் வந்தடைந்தார், ஆண்டவன் அணியும் சந்தனம் முட்டுப்படினும், தேய்க்குங்கை முட்டாதென்று அச்சந்தனம் தேய்க்கும் பாறையில் தன் முழங்கையினைத் தோல்நரம் பென்புகரைந்து தேய, தேய்க்கலுற்றார். அடியார் அல்லல் கண்டு ஆண்டவர் பொறுத்திலர். " அன்பின் துணிவாலிது செய்திடும் அன்ப, உனக்கு துன்பம் விளைவித்த அரசனது ஆணையைக் கைப்பற்றி முன்னர் அவன் விளைத்த இடர் களைக் களைந்து பின்பணி செய்து நம்பேருலகெய்து" எனக் கூறியருளினர். தேய்ந்த கையும் புண் ஊறு தீர்ந்து முன் போலாயிற்று.

இவ்வாறிருக்க, கருநாட மன்னனும் அன்றிரவு இறந்து பட்டனன். மறுநாள் அமைச்சர்கள் பலருங்கூடி, " மன்னரையின்றி ஏங்கும் உலகம் உயிரின்றி வாழும் யாக்கையை ஒக்கும் " என்று தீர்மானித்து, நாட்டையாளத் தக்க ஓர் அரசனைத் தேர்ந்தெடுக்கமுற்பட்டனர். பட்டத்து யானையைக் கண்கட்டிவிட்டு, " இம்மாநிலமேந்த வோரேந் தலை ஏந்து " என்று வேண்டினர். அம் மதயானையும் மதுரை மூதூர் வீதிகளில் திரிந்து, இறுதியில் ஆலவாயான் ஆலயத்தையடைந்தது. அங்கு அடியர் மூர்த்தியார் ஈசன் அருளை எண்ணி நின்றிருந்தார். கண்கட்டிவிடப்பட்ட களிறு அடியாரை வணங்கி, துதிக்கையாலெடுத்து, பிடர் மீது வைத்தது. அதுகண்ட அமைச்சர் முதலானோர் அடியாரை வணங்கி அவரை அரசராக இருந்து நாட்டை நன்முறையில் ஆண்டிட வேண்டினர், எங்கும் மங்கல வாத்தியங்கள் முழங்கின.

அடியார் அமைச்சரை விளித்து " வயங்கு நீறே செய்யும் அபிடேகமுமாக செழுங்கலன்கள் ஐயன் அடையாளமு

மாக அணிந்து தாங்கும் மெய்புன்சடை மாமுடியே முடியாக வையம் முறை செய்குவன்" எனக் கூறினர். இவ்வுரைகேட்ட அறிஞரும் அமைச்சரும் உடன்வர அடியார் சடை மௌலி அணிந்து ஆலவாய் சென்று அரண்மனை திரும்பினர்.

உலகெங்கும் நிரம்பிய சைவம் உயர்ந்து மன்ன, திருநீற்று நெறித்துறை நீடுவாழ, உதவுந் திருநீறுயர் கண்டிகை கொண்டவேணி முதன் மும்மையினு லுலகாண்டு வந்தனர் மூர்த்தியார். பரமன்னவர் சூழ்ந்து பணிந்து போற்ற, ஏதம்பணியாவகை இவ்வுலகாண்டு தொண்டின் பேதம் புரியா அருட்பேரரசாளப் பெற்று, நாதன் கழற்சேவடி நண்ணினர் அண்ணலார்.'

இவ்வாறு அன்பின் பெருக்கால், கடமை உணர்ச்சியால், முட்டுற்ற காலையும் முட்டின்றி முறைமைப்பணி செய்த மூர்த்தியாரது திருநக்ஷத்திரம் நாளை 11-8-55 ல் வருகிறது. கடமை வீரராகிய இவரது நாளைக் கொண்டாடி, சைவர் அனைவரும், தாமும் கடமை உணர்ச்சி மிக்கவராகத் திகழ்வார்களாக! வாழ்க மூர்த்தியார்! வாழ்க உலகாண்ட மும்மைப் பொருள்கள்!

---

# கலையும் பக்தியும்*

அ. நா. ப. திருஞான சம்பந்தன், திருவண்ணாமலை

செந்தமிழ்ச் செல்வர்களே! தாய்மார்களே!!

வணக்கம். கல்விப் பயன்:—இஞ்ஞாலத்தின்கண் வாழும் மக்களுக்கு கலை அவசியம்தானு? கலையின்றி வாழமுடியாதா? கலையளிக்கும் உயர்வு என்ன? என்பன போன்ற பலவேறு கேள்விகள் கலையைப்பற்றி சிந்திக்கும்பொழுது தோன்றுகின்றன. பொதுவாகக் கலையுணர்வு மக்கள் இடையில் இன்றேல் காலப்போக்கில் அவர்கள் மக்கள் இயல்பிற்கு

*திருநாவலூர் சுந்தரர் செந்தமிழ்க் கழகத்தின் 12-ம் ஆண்டு விழாவில் யான் நிகழ்த்திய சொற்பொழிவு.

மாறுன நிலையை எய்துவர் என்பது திண்ணம். கலையைக் கீழைநாட்டார் நோக்கும் தன்மை வேறு; மேலைநாட்டார் நோக்கும் தன்மை வேறு. கீழை நாட்டு மக்கள் கலையை அறுபத்துநான்கு கூறுகளாக்கி அறிவித்துள்ளனர். ‘ஆய கலைகள் அறுபத்து நான்கனையும்’ என்ற கம்பர் வாக்கை நோக்குமின்! மேற் கூறிய கூறுகளுள்ளே பேச்சுக்கலை, எழுத்துக்கலை, கணிதக்கலை, நாடகக்கலை, இசைக்கலை, அலங்காரக்கலை, சாத்திரக்கலை, நிகண்டுணர்ச்சி, இதிகாச மியற்றல், காவியம் இயற்றல், குதிரைப்போர் யானைப் போர் முதலியன அடங்கும். மேல் நாட்டு மக்கள் கலையை இரு கூறுகளாக ஆக்கி உண்மையை உணர்த்துவர். அவையாவன:—1. கலை. 2. விஞ்ஞானம் (Arts & Science) கீழை நாட்டு மக்கள் அறுபத்து நான்கு கலைஞானங்களுக்கு மேலாக ஆத்மஞானக் கலையை உணர்ந்து அதன்வழி ஒழுகி வந்தனர். கலையறிவு நிரம்ப நிரம்ப, ஆண்டு இறைவன் பால் பற்றுள்ளம் இயற்கையாக எழும். உலகமறை அளித்த பெருந்தகை, கற்றதன் பயன் தூய அறிவு படைத் தவனுகு இறைவனின் நற்றாள்களை வணங்குதலாகும். என்று விளக்கியுள்ளார்.

கற்றதனுலாய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅ ரெனின். (குறள் - 2)

கல்வியும் கலையும்:—கல் என்ற பகுதியினின்றும், கல்வி, கலை என்ற சொற்கள் தோன்றுகின்றன. அறியாமையைக் கல்லி எடுப்பது கல்வி, கல்வி அறிவு பெறுதற்குக் கருவி. அறிவு ஓர் உளிபோன்றது. அறிவெனும் பேருளியின் துணை கொண்டு, மனம் என்ற பாறையைப் பொத்தும்பொழுது தான் கலையுணர்வு என்ற பேரறிவு வளரும். கலையுணர்வின் பெருக்கமே கல்வி முதிர்ச்சியின் அறிகுறி. உலகமக்கள் தேடும் செல்வம் எல்லாம் புறத்துழைப்பினை நல்கி அதன் மூலம் பெறும் நன்மையைத் துய்க்க வேண்டியுள்ளன. ஆனல் கல்வியோ அப்படிப்பட்டதல்ல, மக்கள் தனிமையில் அமைதியுற்றிருந்து பல நேரம் சிந்தித்து, சிந்தித்தவற்றை மனத்தகத்தே அமைத்து, அமைத்தவற்றைப் பிறருக்கும் ஈந்து பயன் கண்டு உவப்பச் செய்வது, புறத்துழைப்பால்

தோன்றும் செல்வம் சின்னுட்கள் உளதாகிப் பின்னர் மறைந் தொழிகின்றது. அகத்துழைப்பால் தோன்றும் செல்வம் என்றென்றும் நிலை பெற்று நின்று இன்பம் நல்கிச் சிறப்புற விளங்குகின்றது. பெருநாவலரான வள்ளுவரும், "கேடில் விழுச் செல்வம் கல்வி, ஒருவற்கு மாடல்ல மற்றை யவை" என்று கூறினர்.

கலையும் - புலவர்களும்:—கலை வழி மன்னிய அறிவு கொண்டு, புலவர் பெருமக்கள் வாழ்ந்திருக்கிருர்கள். துறைமங்கலம் சிவப்பிரகாச அடிகளார் கலை என்ற சொல்லை அழகாக இறைவனுக்கு ஏற்றம் தரவேண்டிய இடத்தில், அமைத்துச் சிறப்பு செய்கின்ருர், "திங்கள் வார்சடைத் தெய்வ நாயகன் ஒருகலையேனும் உணரான்" (நால்வர் நான்மணிமாலை) சிலேடைப் பொருளிலே அமைத்து, ஒரு கலையும் உணராதவன் சிவபெருமான் என்கிற பொருளை மேலெழுந்த பொருளாகக் காட்டி, கலைகளின் அறிவுக் கெல்லாம் அப்பால் (எல்லாத் தத்துவங்களையும் கடந்து) நிற்கின்ருன் என்பதை விளக்கமாகத் தெரிவிக்கின்ருர் அடிகளார்.

கலையும் குமரகுருபரரும்:—குமரகுருபர அடிகளார், சகல கலாவல்லி மாலையில் தமிழ்ச் சிறப்புணர்த்தும்பொழுது "கலைத்தமிழ்" எனப்புகழ்கின்ருர்.

"பாட்டும் பொருளும் பொருளால் பொருந்தும் பயனும் என்பால்
கூட்டும் படிநின் கடைக்கண் நல்காய் உளங்கொண்டு தொண்டர்
தீட்டும் கலைத்தமிழ்த் தீம்பால் அமுதம் தெளிக்கும் வண்ணம்
காட்டும் வெள்ளோதிமப்பேடே சகலகலா வல்லியே!

திருவாசகத்தில் கலை:—திருவாசகத்தின்கண் கலை என்ற சொல் அழகாக ஆளப்பட்டிருக்கிறது.

"மலைபரையன் பொற்பாவை வாணுதலாள் பெண்டிருவை
உலகறிய தீவேட்டான் என்னுமது வென்னேடீ
உலகறியத் தீவேளா தொழிந்தனனேல் உலகனைத்தும்
கலைநவின்ற பொருள்களெல்லாம் கலங்கிடுங் காண்சாழலோ!
[திருவாசகம் - 267

சிலம்பில் கலை:—சிலப்பதிகாரகாலம் முத்தமிழ் உயர்ச்சி அடைந்த காலம் எனலாம். பல கலைகள் அந்நேரத்தில் சிறப்புறத் திகழ்ந்தன. மாடமலி மதுரையைப் பற்றிச் சிறப்பிக்க வரும் இளங்கோ அடிகள் அம்மாநகரின் தெருக்களைப்பற்றி அழகுறப் பேசுகிறார். கலைஞர்கள் வாழும் தெருக்கள் இரண்டு இருந்தன என்றும், வேறு வேறு வகைப்பட்ட கலையறிவுடைய அறிஞர்கள் வாழ்ந்தார்கள் என்றும் இளங்கோவடிகள் தெரிவிக்கின்றார்.

“எண்ணெண் கலையோர் இருபெரும் வீதி”

—சிலப்பதிகாரம்.

கலைஞர் சிறப்பு:—மக்களாய்ப் பிறந்தோர் பிச்சை புகினும் கற்றறிவு படைத்தவர்களாக விளங்கவேண்டும் என்று முதறிஞர் கூறியுள்ளனர். மக்கள் தோன்றியதன் பயன் நல்லோர் தொடர்பில் இருந்து நல்லன அறிந்து வாழ்தலே யாகும். நல்லன அறிவதின்முகமாக அவனைப் பற்றிய எண்ணங்களை எழுப்பும் அருமை பெருமை வாய்ந்த ஞான நூல்களைப் பயின்று இன்பம் அடைய மக்கள் முயலல் வேண்டும். மிருகத்தைப் பார்க்கினும் நலத்தால் மனிதர் உயர்ந்த அளவும் நூல்களைக் கல்லாதவரைப் பார்க்கினும் கற்றவர் அறிவால் உயர்ந்த அளவும் சமம் என்பது வள்ளுவப் பெருந்தகையின் கருத்து.

“விலங்கொடு மக்களனைய ரிலங்குநூல்
கற்றாரோ டேனையவர்.” (குறள் - 410)

கலையுணர்வு பெருகுவதற்கு, கலைஞானமும், ஆத்ம ஞானமும் ஒருங்கே அமையப்பெற்ற பெரியோர்கள் கூறும் கருத்துக்களைக் காதாற்கேட்டு, ஒன்பான் சுவைகளை உணர்தலாகும். வாயால் உணரப்படும் அறுபான் சுவைகளையே உண்ணும் விருப்புடையோர் உலகிடை வாழ்ந்தாலென்ன? இறந்தாலென்ன? என்று வினவுகின்றார் தேவர்.

“செவியிற்சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினும் என்?” (குறள் - 420)

இதுவரை கலையைப் பற்றி உணர்ந்த நாம், இனி பக்தியைப் பற்றி சிறிது ஆய்வோம்.

பக்தியும்-பெருமானும் :—பக்தியை வேறு பாங்கில் நோக்கினால் பற்று எனலாம். இறைவனின் பெருங்கருணைத்திறத்தை அறிந்து தெளிதற்கு பக்தியே பயன்படுகின்றது. நம் மனதை ஒரு பொருளின்பால் ஒருமைப்படுத்தி, இடைவிடாது சிந்திப்போமானால், நாம் அவ்வண்ணம் மாறுவது இயற்கை. மனவலிமை உள்ளவன், தன் எதிரில் உள்ளவனை, இடைவிடாக் கண்ணோக்கால் தன் பக்கல் அவன் எண்ணத்தைத் திருப்புகின்றான். அதுபோல மனதை இறைவன்பால் ஒருமுகப்படுத்தி, சிந்தனையை அவன் தனக்காக்கி வாழுங்கால், பக்தி முதிர்ச்சியடைந்து எண்ணும் பலனை நாம் பெறுகின்றோம். தெவிட்டாச் சுவையமுதையளிக்கும் திருவாசகத் தேனை அருளிய மாணிக்கவாசக அடிகளாரும் " பக்தி வலையிற் படுவோன் காண்க " என்று கூறியிருப்பது ஈண்டு எண்ணத்தக்கது.

ஆண்டான் அடிமை :—படரும் கொடிக்கு ஒரு கொழுகொம்பு கிடைத்தால் அதனைப்பற்றி மேலேறி சுகமாகப் படர்கிறது. மாணவன் தன் குருவினிடம் பற்றுகொண்டு, அவர் கூறுவன தெளிந்து, அதன்வழி நடந்து, நல்லோனாக உதவுகின்றான். இல்லிலும் மனைவி தன் கணவனைப் பற்றுக்கோடாகக் கொண்டு, இல்லறம் நடத்திச் சிறப்படைகின்றாள். அடிமை ஆண்டான் பேரில் பற்று வைத்து, அவன் ஆணைவழி நடந்து, வாழ்க்கையைச் சீர்செய்து கொள்ளுகின்றான். எளிய உயிரினங்களுக்கிடையிலேயே பற்றுக்கோடு மிகுந்து காணுமாயின், நம்மைப் படைத்த பெருமானிடம் பற்றுக் கொள்ளவேண்டும் என்று விளம்பவோ எழுதவோ வேண்டுமோ? நாம் அடிமைகள், அவன் நம்மையாளும் ஆண்டான்.

அடிமைகளை ஆளும் திறம்பெற்றவனே ஆண்டான். அவனடித் தொழும்பராக வாழுநருக்கு அவனருள் பெறுதல் எளிதே. திருநாவலூர் நம்பி திருக்கருகாவூர் திருப்பதிகத்தில், தன்னை ஆண்டான் ஆட்கொண்ட திறத்தை விதந்து கூறுவதை நோக்குமின் !

1. ஆவியைப் போகாமே தவிர்த் தென்னை ஆட்கொண்டாய்; 2. வெப்பொடுபிணியெல்லாம்தவிர்த்தென்னை ஆட்கொண்டாய்; 3. வரும்பழி வாராமே தவிர்த்தென்னை ஆட்கொண்டாய்.

இவைபோன்று, செந்தமிழ்ச் சுந்தரர் தம் பதிகங்களில் பல விடங்களில், ஆண்டான் திறத்தைக் கூறுகின்றார். இதன் மூலம் நாம் அறிவது என்ன என்றால், பக்திவலையில் வலிந்துபட்டு, அவனை இடைவிடாது நினைவில் இருத்துவோர்க்கு, அவன் அருள் பெறுதல் எளிது என்பதாம். பக்தி மேலீட்டினாலே கண் அவனைக் காண்கின்றது; காது அவனைக் கேட்கிறது; வாய் அவனைப் பண்ணமைத்துப் பரவசமுடன் பாடுகிறது; நினைவு அவன் பாதத்தைச் சூழ்கிறது. இங்ஙனம் சூழ்கின்றதினாலே, வினைகளெல்லாம் நீங்குகின்றன. இது கட்டியுரைக்கும் கருத்தல்ல. திருப்பாண்டிக் கொடிமுடி என்ற பதிகத்தில் வன்தொண்டர் புகலும் கருத்து இங்கு அரண் செய்வதை நோக்குமின்!
"விரும்பி நின்மலர்ப் பாதமே நினைந்தேன் வினைகளும் விண்டன" பாண்டிக் கொடிமுடி, விரும்பனேயுனை நான் மறக்கினும் சொல்லும்நா நமச்சிவாயவே."

பற்று வேண்டுமா?—பற்றை அறுக்க வேண்டும் என்று எல்லாப் பெரியோர்களும் நமக்குப் புகட்டியுள்ளனர். எப்பற்றை நாம் அறுக்க வேண்டும்? அழிதற்குரிய பொருள்கள்பால் கொண்டுள்ள பற்றுள்ளம் சிறிது சிறிதாக நம்மை விட்டு நீங்க முயற்சிக்கவேண்டும். அழியாத் தன்மையதான, என்றும் நிலைக்கும் பொருளின்பால் பற்று கொண்டே தீர்தல் வேண்டும். என்றும் அழியாப் பொருள் எது? பெருமான் தான்! இத்தகைய அருமை பெருமை வாய்ந்த கருத்தை நமக்குப் பெருநாவலரான வள்ளுவர் எவ்வளவு அழகாகக் கூறுகின்றார் என்பதைச் சிந்தியுங்கள்.

*பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றை*
*பற்றுக பற்று விடற்கு.* (மெய்யுணர்தல் - 10)

பக்தியும் - பணியும் :—காமியப்பணி நிகழ்த்துமிடத்தில் பக்தி முகிழ்க்காது. நிஷ்காமியப் பணியில் ஈடுபடுங்காலத்து, பக்தி சிறிது சிறிதாக முற்றி, பெரும்பயன் விளைவிக்கின்றது. அடியார்களுக்குத் தொண்டு செய்யும் முகமாக பக்தி வளர்ந்த நிலையைத் திருத்தொண்டர் புராணம் உணர்த்துகிறது. 'என்கடன் பணி செய்து கிடப்பதே' என்ற அப்பரடிகளின் அருள் வாக்கை உணர்மின்! பணி

யியற்றி ஒருவர் சிறத்தற்குக் கூட, அவனருளும் முன்பு செய்த தவத்தின் ஈட்டமும் தேவைப்படுகின்றது. 'அவனருளாலே அவன்றாள் வணங்கி' என்ற மாணிக்கவாசகப் பெருந்தகையின் மெய்வாக்கைக் காண்மின்! ஆண்டவனை வழுத்தவும், அவன் திருவாக்கை உணர்ந்தோதவும், முன்பு செய்த புண்ணியம் தேவை என்று திருமூலர் வற்புறுத்துவதை நோக்குக! "புண்ணியம் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு அண்ணல் அதுகண்டு அருள்புரியா நிற்கும்."

நாம் செய்யும் பணிகளின் பலனை எதிர்நோக்காமல் செய்தலைத்தான் மேலைநாட்டுப் பேரறிஞர்களும், கீழை நாட்டு பேரறிஞர்களும் வலியுறுத்தியுள்ளனர். இனி கலைக்கும் பக்திக்கும் உள்ள நெருங்கிய இயைபைக் காண்போம்.

கலையும், பக்தியும், சமயமும் :—உலகிலேயே தென்னாடு (தென்னிந்தியா) என்று நினைத்தால் நம் பண்டைய மக்கள் வளர்த்த கலைகள் முதலில் தோன்றும். அத்துடன் இயைந்தாற்போல பக்தியும் தோன்றி மனமாசை அகற்றித் தூய்மை செய்யும். கலை நிலையை மக்களுக்குத் தெள்ளிதின் உணர்த்திப், பக்தியை எளிதில் பெற்றுக்கொள்ளும் பாங்கில் நம் மூதாதைகள் உணர்த்திச் சென்றுள்ளனர். மக்களின் பண்பட்ட உள்ளத்தை, ஒரு விளக்கிற்கு ஒப்பிட்டால், கலையை இடுதிரியாகவும், பக்தியை நறுநெய்யாகவும், சமயத்தை ஒரு தூண்டுகோலாகவும் கொள்ளலாம். எல்லாம் ஒன்றற் கொன்று ஆதாரமாக அமைந்துள்ளன. நெய்யின்றி, இடுதிரியிருப்பினும், இடுதிரியின்றி நெய்யிருப்பினும் விளக்கு எரியாது. சிறிது நேரம் விளக்கு எரிந்தபின், அணைந்து போகாமல் சுடர்விட்டெரிய, தூண்டுகோல் வேண்டுமல்லவா? எல்லாப் பொருள்களும் விளக்கு எரிய ஒருங்கே, அவசியமாகத் தேவைப்படுவது போல, உள்ளம் என்ற விளக்கெரிய கலையும், பக்தியும், சமயமும் ஒருங்கே அவசியம் என்பதை வலியுறுத்தவும் வேண்டுமோ! தமிழக மக்கள்பால், கலைகள் செழித்து, பக்தி கொழித்து, சமயம் பழுத்து வளர, தாள் தாமரைக் காட்டித் தன் கருணைத் தேன் காட்டும் பெருமானின் திருவருள் முன்னிற்க வழுத்துகிறோம்.

வாழ்க கலை! செழிக்க பக்திவலை!

# நாலாயிரப்பிரபந்த விசாரம்

பாம்பன் ஸ்ரீமத் : குமரகுருதாச சுவாமிகள்

(மலர்–28 ; இதழ்–7 ; 256–ம் பக்கத் தொடர்ச்சி)

திருவாய்மொழி-தீர்ப்பாரை என்றெழும்பத்தின் ருல் (3066) "தவளப்பொடிகொண்டு நீரிட்டிடுமின்" என்பது வெள்ளைமண் புண்டரத்தை விளக்காதோ வென்னின், மண்ணுக்குப் பொடியென்னும் பெயரெந்நூற் கண்ணுமில்லை. திருநீற்றுக்கே அப்பெயருண்டென்பதை மேலே காட்டிய நிகண்டு வாக்கியத்தாலறிவதோடு, திருமங்கையாழ்வார் பெரிய திருமடலில் (2674.71) "கொன்னவிலு மூவிலைவேற் கூத்தன் பொடியாடி" என்பது சிவபெருமானது திருநீற்றை விளக்கியவழி அது நாலாயிரப்பிரபந்தச் செய்புள் வழக்காதலுமறிக. அன்றியும் புதுவதாக வுண்டான வெண்மண் விஷயம் பழையதான நாலாயிரப் பிரபந்தத்தில் வராததுவில்லை யென்றும், அம்மண்ணோடு மிடப்படுகிற மஞ்சட் பொடியும் இடுவிவரமும் அந்தப் பிரபந்தத்தி லெங்கேனுஞ் சொல்லப்படவில்லை யென்றுந் தெரியுமோர்க்கு அப்பொடி திருமண்புண்டரத்தை விளக்காது திருநீற்றையே விளக்குமென்றல் தெள்ளிதிற் புலப்படும்.

இனி, கண்டிகை யென்பது கண்டத்திற் றரிக்கப்படும் யாதொருபணி யெனவா மாற்றுல், "கண்டிகையன்" என்பதற்கும் துளசிமணி அல்லது உருத்திராக்ஷமல்லாத வேறொரு மணியைத் தரித்தவனெனப் பொருள் கொண்டாலென்னை யெனின், வேதத்திற் பிரதிபாதிக்கப்பட்ட சிவசின்ன விபூதியை யணியும் விஷ்ணுமூர்த்திக்கு அஃதோடியைய உருத்திராக்ஷ மாலையையுமணிதலே சிறப்பாம். அவ்வாறவர் அணிந்ததற்கு மேலே காட்டப்பட்ட பஸ்மஜாபாலோபநிஷத்தும், சூதசங்கிதையும், "நாராயணஸ்தபஸ்தே" என்று தொடங்கிச் செல்லுமிடத்தில் "ருத்ராக்ஷமாலாபரணோருத்ரஜப்ய பராயண:॥." எனுங் காளிகா கண்டமும், இன்னும் பல வைதிக நூல்களும் பிரமாணமாகு மாகலின் அக் கண்டிகையை உருத்திராக்ஷ மாலையெனலே யமைவுடைத்து. சிவரகசியத்துப் பற்மாவதிச் சருக்கத்தில் "நன்னதி மூழ்கிப் பூதிகண்டிகை நயந்தணிந்தே" என்பதில்,

உருத்திராக்கமாலையே கண்டிகை யென்வருதல் போலப் பன்னூற்பாட்டுக்களிலும் பெருவரவாய் வருதலால் அம் மாலை கண்டிகை யென்பது செய்யுள் வழக்குமாயிற்று.

நம்மாழ்வார் திருவாய்மொழி மண்ணை யென்றெழும் பத்தின் எ - ல் (3046) "நீறு செவ்வே யிடக்காணி னெடு மா லடியா ரென்றோடும்" என்பது ஸ்ரீ நாராயணப் பெரு மாளடியவரும் திருநீறணிபவ ரென்பதைக் காட்டிற்று. அதனால் ஆழ்வாரனைவரும் அதனையணிந்தா ரென்பது ஐய மற்ற தீர்வையாம். இப்பாட்டிலே "நீறு" என்ற சொல், ஆறாயிரப்படி ஒன்பதினாயிரப்படி பன்னீராயிரப்படி இரு பத்து நாலாயிரப்படி முப்பத்தாறாயிரப்படி முதலிய வியாக் கியான மனைத்தினும் விபூதியென்றே அருத்தம் பண்ணப் பட்டதெனவும், அதற்குப் "பஸ்மத்தின்மேற் சயனஞ் செய்பவனும் பஸ்மதாரணஞ் செய்பவனும் உருத்திராத்தி யாய பாராயணஞ் செய்பவனும், மதுபானம் - குருபத்தினி புணர்ச்சி - பொன் திருடல் - பிரமஹத்தியாதி மஹாபாதகங் களைச் செய்திருப்பினும், சர்வ பாவங்களினின்றும் விடுதலை யாவார்கள்" எனும் பொருளைத் தரத்தக்க—

"மத்யம்பீத்வாகுருதாராம்ஸ்சகத்வாஸ்வர்ணஸ்தேயம்ப்ரஹ்ம ஹத்யாஞ்சக்ருத்வா| பஸ்மச்சந்நோபஸ்மஸய்யாஸயாநோருத்ராத் யாயீமுச்யதேஸர்வபாபை꞉||"

எனுஞ் சாதாதபஸ்மிருதி வாக்கியங்களுங் காட்டப்பட்டன வெனவும், நீறென்பதற்கு விபூதியைவிட்டு வேறொன்று கோடலொண்ணாதென மேலே விளக்குற்ற நியாயஞ் சாலு மெனவுந் தெரிவிற்பந்நருக்கு ஈண்டுமதுவே பொருளென விளங்குமன்றோ. இங்கே நீறணி சிவனையே நெடுமாலடியா ரென்றதாக அருத்தம் பண்ணச் சிலர் ஆசைப்படுகின்றனர். நெடுமாலே நீறணிபவரா யிருத்தலாலும், நூதனத் திருமண் புண்டரம் அவர்க்கின்மையாலும், சந்தர்ப்ப விரோதமும் வியாக்கியான விரோதமுஞ் சம்பவிக்கின்றமையாலும் அவ்வாசை யவலமா யொழியுமென்றோர்க.

"ஶிவஸ்யவிஷ்ணோர்தேவாநாம்ப்ரஹ்மணஸ்த்ருப்திகாரணம்।
பார்வத்யாஶ்சமஹாலக்ஷ்ம்யா:பாரத்யாஸ்த்ருப்திகாரணம்।
பஸ்மநாவேதமந்த்ரேண த்ரிபுண்ட்ரஸ்யதுதாரணாத்॥"

எனும் பராசரஸ்மிருதி வசனங்கள் "வேத விதிப்படி பஸ்மாவினுல் திரிபுண்டரந் தரித்துக் கொள்வதால் சிவபிரான் விஷ்ணுமூர்த்தி பிரமதேவர் பார்வதிதேவி இலட்சுமிதேவி சாஸ்வதிதேவி யென்பார்கட்குத் திருப்தியுண்டாகும்" எனும் பொருளையும்,

" திக்பஸ்மரகிதம்பாலம் திக்ராமமசிவாலயம்।
திகநீசார்சநம்ஜந்ம திக்வித்யாமசிவாச்ரயாம்॥"

எனுங் கூர்மபுராண வசனங்கள் "பஸ்ம மணியாத நெற்றியைக் கொளுத்து, சிவாலய மில்லாத கிராமத்தைச் சுடு, சிவார்ச்சனை செய்யாதவனது ஜன்மத்தில் தீயை வை, சிவனை யாச்சிரயிக்காத சாஸ்திரத்தை யெரித்துவிடு" எனும் பொருளையுந் தருதலால் விஷ்ணு பக்தர்கட்கும் ஏனையோர்க்குந் திருநீறணிதல் உரியதாமன்றே. இத் திருநீற்றின் பிரபல விஷயம் அனேக பிரமாண நூல்களின் விளக்கப்பட்டிருப்பினும் அதன் மகிமையையும் அதனை யணியாதாரடையுந் தோஷங்களையுஞ் சுருதிவாக்கியம் உபநிஷத்து முதலிய சங்-நூல்களாலும் விளக்குதலைப் பஸ்ம மஹாத்மியம் எனும் ஒரு நூலிற் காணலாம். அற்றாகலினன்றே "வேதத்தி லுள்ளது நீறு வெந்துயர் தீர்ப்பது நீறு" எனத் திருஞானசம்பந்த சுவாமிகள் தேவாரமும் முழங்குகின்றது.

பிரபல சுருதியாகிய கoஅ - உபநிஷத்துக்களில் உருத்திராக்ஷ மகிமையை ஆங்காங்குக் கூறத் திரிபுராதபநம் - திரிபுரம் - தக்ஷிணாமூர்த்தி - ஜாபால முதலிய உபநிஷத்துக்களிருப்பினுஞ் சிறப்பாக வுரைக்கச் சாமவேத ருத்ராக்ஷ ஜாபாலம் இருக்குவேத அக்ஷமாலிகை யெனுமுபநிஷத்துக்களிருக்குமாறு விபூதி மகிமையையும் ஆங்காங்குக் கூறக் காலாக்கினி ருத்திரம் - பாசுபதப்பிரமம் - சாண்டில்யம் - ஜாபாலம் - பிருகஜ்ஜாபாலம் - சுவேதாசுவதரம் - ஜாபாலி-

அதர்வசிரசு - வாசுதேவம் - இராம ரகசியம் - தைத்திரீய மாதி உபநிஷத்துக்க ளிருப்பினும், சிறப்பாக வுரைக்க அதர் வண வேதபஸ்மஜாபாலோபநிஷத்தும் இருக்கின்றது. இப்படித் துளசி மணிக்கும் (மண்ணும் மஞ்சட்பொடியுங் கொண்டிடும்) சித்திரோர்த்த புண்டரத்திற்கும் உபநிஷத் துக்களில்லை. அதனுல் உருத்திராக்ஷதாரணமும் பஸ்மதாரண மும் வேதசம்பந்தமெனும் வைதிகமாம். துளசிமணியணி கையும், அந்த ஊர்த்தபுண்டர தாரணமும் அச்சம்பந்த மின் றெனும் அவைதிகமாம். வேதமார்க்கத்திற்குப் புறம்பான கொள்கையை விஷ்ணுபுராணம் நக்கினமென்று கூறுகின் றது. இதனையே பதிதமெனவும், பாஷண்டமெனவும் பகர் வர். இவ்விதக் கொள்கையிலுள்ள வைணவரிற் சிலர், வைதிக சைவ சமயத்தைப் பாஷண்ட மதமெனக் கை கூசாம லெழுதுவதோடு வாய்கூசாமற் சொல்லியுந் திரிகிறூர் கள். சைவ நிந்தையாயுஞ் சில வைணவர் அவாவிவாசித்து வருவதாயுமுள்ள "பாஷண்ட மதசபேடிகை" எனு மொரு புத்தகமே யிதற்குச் சாக்ஷியாகும். இதனை யேவர் செய்கை யென்பேம். அஃது அவர்மதச் சபேடிகையே யாகும். அப்புத்தகத்தில் "சாம்பற் பொதிசுமக்குஞ் சைவ கரங்கள்" எனவும், "இச் சைவக் கழுதைகளை யல்லாத நாலுகாற் கழுதைகளைக் காட்டிலும் மேன்மையுடையன வாக" எனவுமெழுதப்பட்டுள்ளன. கரமென்பது கழுதை. இவ்வித தூஷண மெல்லாம் மேல் விளக்கியவாறு சைவ சின்னதாரணராய்ச் சிவபூசை செய்த நாராயண மூர்த்தி யாதி பலரையும் பற்றி நிற்றலிற் பல்லோர்க்கும் வியசனந் தருமூலமேயாம். அன்றியும் பஸ்ம மகிமையைப் பகரும் உபநிடத மெல்லாம் வைணவர் சிறிய திருவடியெனும் ஹனுமருக்கு இரகுராமரா லுபதேசிக்கப்பட்டதும், சதுர் வேதத்து கOஅ - உபநிடதத்துக்குமுரிய சாந்தியும் பெயருந் துலக்கி இவை பிரமாணமா மென்பதுமான முக்திகோப நிடதத்திலுள்ளனவாகலின், இந்தப் பஸ்மநிந்தை அந்த ஹனுமரையும் இராமரையுந் தொடர்வதுமாயிற்று. ஈதென் கொலோ! ஈதென்கொலோ!! மறித்தும், அச்சபேடிகையி

ஞெருசார் ஸ்ரீ ஞானசம்பந்தர் முதலிய சைவத் திருமுறை யாளரையுஞ் சைவரையுங் குறித்து, "அவர்கள் பாட்டைக் கள்ளைக் குடித்துச் சுள்ளையிற் புரளும் பண்டாரப் பயல்கள் கொண்டாடுவர்" எனவு மெழுதியுள்ளது. இது, பண்டார மென்பதன் பொருளறியாதார் கூற்றுவதோடு, பெரியாழ்வார் திருமொழி நெய்க்குடத்தை யென்றெழும்பத்தின் டு-ல் (447) "மாணிக்கப் பண்டாரங் கண்டீர் வலிவன்" என்றபடி பண்டாரமாயிருக்கின்ற நாராயணமூர்த்தியையும் அவரைப் பாடியுள்ள பண்டாரப் பாட்டுக்களையும் பழிப்பது மாயிற்று. அன்றியும், வைணவர் பாகவதம் ௧௦-௧௧-ம் ஸ்கந்தங்களும் பாரதமுங் கூறுமாறு (சைவர் தீண்டாக்) கள்ளைக் குடித்து கலாமும் விளைத்த பலராமர் பிரத்தியும்நர் சாம்பர் அநிருத்தாதியராகிய வைணவமூர்த்திகளை நிந்தித்தது மாயிற்று. அப்பாஷாண்டசபேடிகையின் மற்றொருசாரில் "அதிக்ஷுத்ரர்களான கம்மாளராலே நாட்டப்பட்டதொரு குழவிக்கல்" என்றெழுதியுள்ளது. இது சிற்ப நூலாரையுஞ் சிவலிங்கத்தையும் இழித்துரைத்ததாகும். இவ் விழிப்புரை வைணவர் கும்பிடும் அர்ச்சாவதாரவிக்கிரகம் ஆழ்வார் விக்கிரகமென்பவற்றை யுண்டு செய்யுங் கம்மியர்களையுங் கல்-மரம்-சுண்ணம்பு முதலியவற்றாற் செய்துள்ள அவ்விக்கிரகங்களையும் பற்றுமேயென்றும், நங் கூற்றுவழியே நஞ்சாளக்கிராமத்தை மற்றவர் தேய்புக் கல் லென்னாரோ வென்று மெண்ணாதா ரெழுதியது அப் பழிமொழி யென்றும். இப் புத்தியினாலன்றோ காளத்தியில் கோவிந்தபட்டர் உருத்திராக்ஷத்தை "இலந்தைக் கொட்டை" எனச் சொன்னாரென்று மேலைக் குரு பரம்பரைக்காரருங் கூறுவாராயினர். வைதிக ருத்ராக்ஷம் இலந்தைக்கொட்டையாகு மென்பார் துளசிமணி விறகுக் கட்டையாகாதோ வென்பார்க்கு என் சொல்வரோ வென்பதூஉம் விவேகிகளே யுணரத்தக்கது. அங்ஙனந் திருநீற்று நிந்தையாய்ச் சாம்பலெனுஞ் சொல்லெழுந்தாங்கு அச்ச பேடிகையிலும் "பஸ்மோத் தூளநமும், தேவடியாளுடையகுஹ்யப்ரதேசங்களிலே ரோமோல்லுஞ்சனார்த்தமா

கச் செய்யப்பட்ட பஸ்மோத் தூளநவேஷத்தாலே யதிலே மறைந்துகொண்டது" எனும் ஆபாச வசனங்க ளெழுந் தன. சில வைணவர் அந்நீற்றைச் சுடுகாட்டுச் சாமப லெனவுஞ் சொல்லித் திரிவர். இங்ஙனஞ் சௌசத்திற் குபயோகமாகு பருமண்ணும் வைணவர் நெற்றியிலிடு திரு மண்ணும் ஒன்ருஞ வல்லவோ, திருநீறும் மற்றைச் சாம்பலு மொன்ருகும். அவ்வாருகாமையால் இவ்விடயத்தில் அவ் வைணவரறிவிருந்தவாறு வியக்கற்பாலதே. நாராயணர்தாம் களவிற்கலந்திருந்த பிருந்தை யுடம்பான பிணச் சாம்பலில் வீழ்ந்து புரண்டழுது கிடந்த விருத்தாந்தத்தை ஸ்காந்தங் கழறுமென்ருய்ந்த அறிவுள்ள வைணவர் "சுள்ளையிற் புரளும் பண்டாரப் பயல்கள்" என்றும், திருநீற்றைச் சுடு காட்டுச் சாம்பலென்றுஞ் சொல்லுவரோ? சொல்லார். மறித்தும், அச்சபேடிகையார் இலச்குமிதேவியைக்குறித்துப் "பிராட்டிக்கும்" என்றெழுதியதற்கு முன்னே உமாதேவி யைக் குறித்துக் "காளிக்கும்" என்றெழுதி வைத்தார். பசிய மேனியுண்மையின் அத்தேவியைக் காளியென்னலா மென் பது அவர் கருத்துப்போலும். அங்ஙனமாயின். அது செவ்வே பொருந்ாது: பொய்கையாழ்வார் "கார்மேனி" என்ற படியாகத்தானே நாராயணரைக் கருப்பண்ணன் என்பது செவ்வே பொருந்துமென்று மற்றவர் கூறுவரேயென்பதை யும், இலக்குமி அமிசமாகிய ருக்மிணிதேவி ஸ்ரீ கிருஷ்ண ரைப் புருஷனுக அடையு நிமித்தம் உமாமகேசுவரியைப் பூஜித்த செய்தி வைணவர் பாகவதம் ௧௦-வது ஸ்கந்தம் ருஉ-வது அத்தியாயத்து முண்டே யென்பதையும் அவ ரெண்ணுராயினர். பெயர்த்தும், அந்நிந்தைச்சபேடிகை யில் ஸ்ரீ அப்பைய தீக்ஷிதராகிய பெரியவரை அபாரநிந்தை செய்கின்றவிடத்தில் "விஷ்ணுத்வேஷிகள் சண்டாளபிந்து வுக்குப் பிறந்தவர்களே தான்" எனத் தீட்டி அதற்குப் புராணவசன முண்டென்றும் பொறிக்கப்பட்டுள்ளது. ஒருவாறு அவ்வித வசனமிருந்தாலும் அது - சிவாலயங் களிற் பரிவாரதேவ வகுப்பில் விஷ்ணு விம்பங்களிருத்தலா னும், அவைகளையுஞ் சைவர் கும்பிடலானும், அவர் சிவ

னடியாராகிய திருநாவுக்கரசு சுவாமிகள் முதலினோர் திருப் பெயர்களைத் தம் மகார்க்கு வைத்து வருதல் போலச் சிவனடியாராகிய நாராயணர் பெயர்களையும் அவர்களுக் கிட்டுவரும் வழக்கிருத்தலானும் சைவர்களைத் தொடராது. இவ்வாறு சைவத்தை யநுசரித்த கொள்கை யேதுமில்லாத அவ்வைணவரையே "எந்த மனிதனுக்குப் பஸ்மத்தினிடத் தும், திரிபுண்டரோத்தூளன காரியத்தும் துவேஷமுண்டா கின்றதோ, அவனுடைய உற்பத்தியில் (கலப்பு) சாங்கர்ய முண்டாயிருக்கவேண்டு மென்று பண்டிதனல் ஊகிக்கத் தகும். வேதப்பிரதிபாதிதனை மகேச்வரனிடத்திலும் திரி புண்டரோத்தூளனுதிகளிலும் மஹாபாவிகளான மனி தர்க்கு மாத்திரந் துவேஷமுண்டாகும்" எனும் அருத்தந் தரத்தக்க—

"யஸ்யஸ்யாத்பஸ்மநித்வேஷஸ்த்ரிபுண்ட்ரோத்தூளநாதிஷு|
உத்பத்தௌதஸ்யஸாங்கர்யமநுமேயம்விபச்சிதா||
மஹாபாபவதாம்ந்ருணாம்வேதவித்தமஹேச்வரே|
த்ரிபுண்ட்ரோத்தூளநாதௌசப்ரத்வேஷஸ்ஸப்ரஜாயதே||

என்ற பராசரவாக்கியந் தடையின்றித் தொடர்வ தாயிற்று. பஸ்மதாரியை நிந்திப்பவர் உற்பத்தியானது சூத்திரசம்பந்தமா யிருக்கவேண்டுமென்று வாசிஷ்டலிங்க மும் "யேபஸ்மதாரிணம்" எனுந் தொடக்கத்து வசனத் தால் வெளியிடுவதாயிற்று. இவ்விதிக்கு யாரென்செய்ய லாம். கிணறு வெட்டப் பூகம் புறப்பட்டது போலா யிற்றே. பரிதாபம்! பரிதாபம்!! இங்கே, சைவரையே சண்டாள பிந்துவுக்குப் பிறந்தவரென வேண்டுமென்கிற அயோக்கிய ஆசை அவ்வைணவர்க் கிருந்தால் அது,- விவாகமுன்னிலையில் வைணவ வீட்டுப் பெண்ணை சைவ வீட்டுக்குக் கொடுத்திருத்தலும் இவ்வுலகிலுண்டாயிருக்கிற வழி அப்பெண் வயிற்றிற் பிறப்போரும் நாராயணத்வேஷிக ளெனப்பட்டு அவர் ஜன்மமும் அச்சண்டாள ஜன்மமே யெனத் தீர்மானிக்குமல்லவா? உய்த்துணர்க. இன்னன

காரணங்களானே அந்தத் தீக்ஷிதமூர்த்தியை நிந்திக்குமா றெழுதியவனைத்தும் அவலமெனச் சிறுவருமறிவர். இன் னும், அந்நிந்தைச்சபேடிகையில் எவரும் அருவருக்கத்தக்க நிந்தையெண்ணிலவுள. அவையற்றை யிங்குக் காட்ட மன மில்லா துவிட்டனம். அப்புத்தகத்தின் மறுப்போ சிவாதிக் கிய ரத்நாவளியின் இரண்டாம் பாகமாயுள்ளது.

சிவனால் நாராயணர் தண்டிக்கப்பட்டா ரென்பதும் நாராயணர் தங்கண்ணைப் பிடுங்கிச் சிவார்ச்சனை செய்தா ரென்பதுங் கூறும் பைப்பலாத சுருதியையும், அவர் வராக மாகிச் சிவனடியைத் தேடியது கூறும் அந்தச் சுருதியை யும் மற்றைச் சுருதியையும் மறுக்கும் வகையேதுமின்றி அச்சபேடிகைக்காரர் "கண்ணைப்பிடுங்கி நாராயணன் சிவனை யர்ச்சனை செய்ததும், பன்றியாய்ப் பூமியைக் கிழித்துச் சென்றதும் ஆகியவெல்லாம் மாயா லீலையைப் போல மாயா நாராயணன் கதை" எனவும், சிவன் "தானே விஷ்ணுவாக வந்து தன் கண்ணைக் கொண்டு தன்னையே பூஜித்து, பின் தன்னைத்தானே சூலத்தாலே குத்தியேந்திக் கொண்டு" எனவும் இரண்டிடத்தில் எழுதிவைத்தார். பிர மாணமில்லாத இவ்விபரீதார்த்தம் அவர் மதத்திற்கே ஹானி யாகுமென்பது தெள்ளிது. இம்மட்டோ, "சக்கர நெறி நில்" என்று ஒளவையாரருளிச் செய்த ஆத்திச்சூடி வாக் கியத்திற்கு 'அரசனாணை வழிநில்' என்றுலகெலாங் கொள் ளும் அருத்தத்தை மறுத்து வைணவருடம்பிற் பொறிக்கிற சக்கரக்குறியெனத் தாபிக்கும் வழி, "சக்ராங்கநத்தையே சொல்லுகிறது" எனத் தேற்றேகாரங் கொடுத்தும் ஒரிடத் தெழுதிவைத்தார். இவரிப்படிச் செய்தக்கால் சைவர் — சக்கு = கண் அதாவது நெற்றிக்கண்ணையுடைய அரனெறி நில் = அரனது மார்க்கத்திலேயே நில் என்றருத்தஞ் செய லுமாமே. ஆவதேல், "நெற்றிச்சக்கு" என அதிலிருக்க வேண்டுமே யெனின், பிறிதர்த்தத்திற்குச் 'சக்ராங்கநம்' எனவும் அதிலிருக்கவேண்டுமே. இரண்டுவகையு மில்லை யென்க. பிருகஹந் நாரதீயத்தில் "யஸ்துஸந்தப்தசங்காதி- லிங்கசிந்ஹதநுர்நரஃ ஸஸர்வயாதநாபோகி — சண்டாலஃ

கோடிஜந்மபி:" எனவும், "யோத்விஜஸ்தப்தசங்சாதி-லிங்காங் கிததநுர்நர: ஸம்பாஷ்யரௌரவம்யாதி — யாவதாசந்த்ரதாரகம்" எனவும், "ஜபேச்சபௌருஷம்ஸூக்த—மந்யதாரௌரவம்வ்ரஜேத்" எனவும் வருவசனங்கள்சக்ராங்கநம் சண்டாளப்பிராப்தத்தைப் பயக்கும், சங்கசக்ரதாரணங்களையுடையவரோடு சம்பாஷித்தலும் நரகம், சக்ராங்கநமென்னுங் கிரியையாற் சூடுண்டவனைக் கண்ட தோஷநிவாரணமாகச் சூரியஜபமும புருஷசூக்த ஜபமுஞ் செய்யவேண்டும். செய்யாவிடில் ரௌரவநரகமடைவது ஸித்தம் எனும் பொருள்களைத் தரும். இன்னும் பலவுள: விரிவஞ்சிவிட்டாம். இப்படிப்பட்ட சக்ராங்கநத்தையோ அறநெறியோதும் ஔவையார் அங்கீகரிக்கக் கூறுவர். கூருரென்பது திண்ணம். ஆயின், "திருமாலுக்கடிமை செய்" என்று அவர் கூறியதென்னையெனின், கடவுட் செல்வப் பெருமையுடையார்க்கு அடிமைசெய் என்றதென்க. சிவன்மீது மோகங்கொண்ட விஷ்ணுமூர்த்திக்கு மோகப் பொருளில் மாலென்பது ஆகுபெயராயவாறே அது பெருமைப் பொருளில் அஃதுடையார்க்குமாயிற்று. "அறஞ்செய விரும்பு" என்பதை முதற்கட் கொண்டுள்ள நீதிநூல் அஃதாகலின், ஒரு மதக்கடவுள் வழிபாட்டினையிடையிற் கூறினரென்னின் வழூவாகும். திருமாலுங் கடவுளடியவராகலிற் பொதுவிதியான் அவர்க்கும் அஃதேயுமென்றலுமாம். அந்நூற் கடவுள் வணக்கம் ஆத்தி சூடுஞ் சிவனார் பெயரினிருத்தலும், நல்வழியில் "நீறில்லா நெற்றி பாழ்" என வருதலும் அந்த ஔவை மூதாட்டியைச் சைவமங்கையெனக் காட்டுமென்பதூஉம் ஈண்டுக் கருதிக்கொள்க. இது நிற்க, இரத்தினகேட தீக்ஷிதர் முதலிய வைதிகசிலர்க்கெல்லாம் அநுக்கிரஹம் புரிந்து விதண்டாவாத சண்டபாஷண்ட சண்டமாருதமாகி அநேகபிரமாணங்களைக்கொண்டு அநேக நூல்களியற்றி அவைகளில் வைஷ்ணவமத கண்டனமுஞ் சைவமத ஸ்தாபனமுஞ் செய்த, அந்த அப்பைய தீக்ஷிதரெனும் பெரியவரைப் பொறாமையால் நிந்தித்துத் திரியும் வைணவரிலொருவராகிய அச்சபேடிகையார், "(அப்பைய

தீக்ஷிதன் அந்திய காலத்தில்) சிவனே பரதத்துவமென்கைக்கு நாராயண சப்தத்திலே 'ணத்வம்' பாதியா நின்றது. ஆகையால் நாராயணனேதான் பரதத்துவமென்று சொல்லிப்போனனென்னுமிடம் சர்வலோக பிரசித்தமல்லவா?" என்றெழுதினர் கண்டீர். இச்செய்தி:—தன்மகனை அரசனுக்க அவாக் கொண்டு அவனை யரசனென்று சொல்லித் திரிந்த குற்றத்திற்குப் பதிவிரத சீலமுள்ள அரசியால் தண்டிக்கப்பட்ட ஒரு குடியானவன்; "யான் அரசனுக்கு மனைவியாகி யானீன்ற புத்திரன் இன்ன, குடியானவனுக்கே வுற்பத்தியானவன் அதனல் அந்தப் புத்திரன் இவ்வரசுக்கு யோக்கியனுகான். அக் குடியானவனுடைய மனைவியீன்ற மகனே கோடாச்செங்கோலுள்ள என்னரசனுக்கு உற்பத்தி யானவன் அவனே யிவ்வரசுக்கு யோக்கியனுவான்" என்று இவ்வூரரசி அந்திய காலத்தில் ஊரறியச் சொல்லிப்போனுளல்லவா அதனல் என் மனைவி பெற்ற பிள்ளையே அரசனுக வேண்டுமென்பதற்கே பொப்பிடத்தக்கது. சிவசக்தியாகிய நாராயணி கொண்ட புருஷகோலத்திற்கே "நாராயணன்" எனும் பெயர் சிறந்து நிற்றலால், சிவனே பரதத்துவமென்கைக்கு 'ணத்வம்' பாதிக்குமென்பது பயனில் கூற்றும். நாராயண சப்தம் சிவபரமாமாறு உஅ-வகையாக மல்லிகார்ச்சுநாராத்தியர் சிவபரகேசவாதி நாம நிர்வசநம் எனு நூலில் அருத்தஞ்செய்துளாரே. இவ்வகையை அம் மஹா பண்டிதராகிய தீக்ஷிதரோ அறியாதவராவர்? இப்படியே நம்பத்தகாத செய்திகளும், மேற்கோள்களும் புரட்டருத்தங்களும் அந்நிந்தைச்சபேடிகையில் நிறைந்துள்ளன. இவ்விதமே வைணவ ரெழுதிய புத்தகமெல்லா மெனற்கு ஈண்டு ஸ்தாலீபுலாக நியாயமாக இன்னுஞ் சில வெடுத்துக் காட்டி யுரியநியாயமு முரைப்பாம்.

கூரேச விஜயத்தில், இராவணன் உருத்திரன்மீது வைத்த அபிமானத்தாலே வேதத்தில் நமக சமகங்களைச் செய்தனன்: அவை கொண்டு உருத்திரனுக்குப் பரத்துவம் பகரொண்ணுதென்ப தெழுதப்பட்டது. ஆவதேல், நாராயண விசேடம் விளம்புஞ் சுருதிகளை நாராயண அபிமானிகள் செய்தனர்:

அவை பிரமாணமாகாவென மற்றையருங்கூறல் கூடுமாக லின் அவ்விஜயவெழுத்து வைணவர்க்கு அபஜயவெழுத்தே யாம். மேலும் அந்த நமக சமகங்கள் கடவுளருளிச் செய்த புராதன வேதங்களின் மத்தியில் அதாவது யஜுர் வேதத்து நான்காவது காண்டத்தின் நடுவில் பிரபலமாய்ப் பிரகாசித் துள்ளனவாகலின், அவற்றை அப்பிரமாணப்படுத்தும் வைண வரை அஃது அவைதிக சிரேஷ்டராக்கி நிற்பதுமாயிற்று. அவ்விஜயம் திரிபுர சம்ஹாரகட்சியில் "ஸ்ரீ ராமாயணத்திற் சிவன் அனுமாராயவதரித்தாரென்றதில் கண்டுகொள்வது" என்பதெழுதப்பட்டது. இச்செய்தி "வான்மீகஞ் சொல் லும்" என்று தசாவதாரக்கட்சியிலு மெழுதப்பட்டுள்ளது. இவ்விடயம் வான்மீக ராமாயணத்திலில்லை: அனுமரை வாயு அமிசமென்றே அது கூறுமென அதனை வாசித்த அனைவரு மறிவர். இங்ஙனம், "வாயு மற்றெனதுகூறு மாருதியென லும் * * * * புராரிமற்றியானே வாதசேயெனப் புகன்றான்" எனக் கம்ப ராமாயணங் கூறுமே யென்னின், வான்மீகத் திற்குப் பலதிற வித்தியாசமுளது அவ்விராமாயணமாகலின் அது பிரமாணமாகமாட்டாது. வேறு வடநூல் கூறுமென் னின், இராமசரிதத்திற்கு அவ்வான்மீகமொன்றே முதனூல்: அதன்வழி வருமெந்நூலும் அதற்கு விரோதங் கூறுதல் பொருந்தாது. அந்நூலார் அனுமரது வீரநோக்கி இவரை யுருத்திராமிச மென்னலாமென அது கற்பித்துக்கூறின ரென்பதே யங்ஙனமமைவுடைத்து. அனுமரைச் சிவனெ னுஞ் செய்தி ஆஞ்சநேய ராம வைபவ பங்கம் எனுமொரு நூலிற் பலவாறாகவு மறுக்கப்பட்ட தொன்றாம். அவ்விஜயம் மன்மத தகன கட்சியில், துரோணர் பத்தினிக்கு நிதம்பப் பிரதேசம் அழகாயிருக்குமெனல் கேள்விப்பட்ட சிவன் அவளைப் பார்க்கவந்த காலத்திற் கலிதமான சிவவீரியம் அசுவஉணவில் விழுந்ததாலே அசுவத்தாமா பிறந்தானென்று பாரதஞ் சொல்லுமெனும் விடய மெழுதப்பட்டுள்ளது. வியாச பாரதத்தி லிப்படி யில்லை. சிவானுக்கிரகத்தால் துரோணர் பத்தினி கர்பத்திற் பிறந்த பிள்ளை அசுவம்போல கனைத்தது. அதனால் அது அசுவத்தாமாவெனும் பெயர்பெற்ற

தென்பதே யதிலுள்ளது. அக்கட்சியைத் தழீஇத் தமிழ் பாரதங் கூறுமெனின், அது பிரமாணமாகாது. அவ்விஜயம் சோழன் திக்குவிஜயத்தில் "என்றங்ஙனம்" என்றற்றொடக்கத்துச் செய்யுளில் சோழனழைப்புக்கு அஞ்சி யூர்விட்டோடும் இராமாநுஜர் மேனாட்டுவழிச் செல்லும்போது அவரைத் தொடர்ந்த சோழன் ஆட்களை அங்ஙனம் ஸ்ரீரங்க நாயகர் பாணப்பிரயோகஞ்செய்து கொன்றார்: அச்செய்தியைச் சோழன் கேட்டு மனந்தளர்ந்தானென்பது வெளியாகின்றது. பாணப்பிரயோகச் செய்தி குருபரம்பராப் பிரபாவத்திலில்லை. அதனால் இது மகிமை ஸ்தாபிக்க வரைந்த வன் பொய்யாகும். கூரத்தாழ்வார்க்கும் பெரியநம்பிக்கும் அச்சோழ பூபதியாற் கண்கள் பறிக்கப்பட்டமையும் பறித்த வேதனை பொறாமல் பெரியநம்பி மரணமடைந்ததும் அக்குருபரம்பரை கூறும். இவ்விஜயத்துக் கூரத்தாழ்வார் வைபவத்திலோ அவைகள் மறைக்கப்பட்டன. அதர்வண சரபோபநிஷத்தில் "யோலீலயைவத்ரிபுரந்ததாஹகாமம்காலம்ஸோமஸூர்யாக்நிநேத்ர:" "விவிக்லபம்பீட்யமாநம்ஜகாநபஸ்மீசகாரமந்மதம்" என வருவதற்கும், வைணவர் பாகவதம் தசமஸ்கந்தம் ருரு-வது அத்தியாயத்தில் சிவனாது நெற்றிவிழி நெருப்பால் மன்மதனெரிந்தான். அவனே ருக்மிணி தேவி வயிற்றிற் பிரத்யும்நனாகப் பிறந்தா னென்பதற்கும் (திருமால் மகனாகிய மன்மதன்) உடம்பில்லாதவ னென்னும் பொருள் பயக்கும் "அனங்கன்" எனும் பெயரைத் திருமழிசையாழ்வார் தமது இயற்பாவில் வருவித்து "அனங்கவேடாதைக்கு" என பாடினதற்கும், பல புராணேதிகாசங்களுக்கும் கூரத்தாழ்வார் அவனுரு எரிந்ததை யொப்பாமலெழுதிய காமதகனகட்சி விரோதமாகும். வேதவிரோதமான இக்கட்சியை அந்தக் குருபரம்பரை திருமழிசையாழ்வார் வைபவத்தில் "இவரை யநங்கனைப்போலே யாக்கக்கடவேனென்று" சிவனார் வெகுண்டாரெனவொத்துக்கொண்டதும் மறுக்கும். அவ்வாறே வில்லிபுத்தூராழ்வார் பாரதம் கூ-ம் போர்ச்சருக்கத்தில் "எண்ணுடைக் காமனை யெரித்த பேரழற் கண்ணுடைக் கடவுளே" என்று கண்ணபிரான்

செய் துதியுரையாக வருவதும் மறுக்கும். மேலைய சரபோப நிஷத்தில் "யோகோரம்வேஷமாஸ்தாயசரபாக்யம்மஹேச்வர : ந்ருஸிம்ஹம்லோகஹந்தாரம்ஸஞ்ஜகாநமஹாபல :" என்னும் வசனத்தால் பயங்கரமான சரபவேஷந்தரித்து, லோகபீடிதமாயிருந்த நரசிங்கத்தை அடித்தவர் எனச் சிவ பெருமான் துதிக்கப்பட்டிருக்கின்றார். இந்தப் பிரபல சுருதிக்கும் இதனைத் தழீஇவரு புராணங்களுக்கும் விரோதமாகச் சரபர் நரசிங்கரை வென்றதில்லை யென்றும் அதற்குச் சில புராண வசனங்களுண் டென்றும் அவ்விஜயத்துச் சரபர் நரசிங்கர் கட்சியின் முடிவு செய்ததும் நரசிங்கந்தான் சரபத்தைக் கிழித்தெறிந்ததென்று கருடபுராணஞ் சொல்லுவதாக யமசம்ஹார கட்சியிலெழுதியதும் தகாத காரியமாம். "யோமத்ஸ்யகூர்மவராஹஸிம்ஹாந்விஷ்ணும்க்ரமந்தம்வாமநமாதிதேவ : விவிக்லபம்பீட்யமாநம்" எனும் அவ்வுபநிஷத் வசனத்தால் விஷ்ணு மூர்த்தியையும், அவருடைய அவதாரங்களான மத்ஸ்ய கூர்ம வராக நரசிம்ஹாதிகளையும் வாட்டிப்பீடித்து இரக்ஷிப்பவர் சிவனாரென வியக்தமாகின்றதற்கும் அம்முடிவு முரணும். நரசிங்கஞ் சரபத்தைக் கிழித்தெறிந்தது உண்மையானல் அவ்விவரம் வைணவர் பஞ்சதபநமெனக் கொண்டாடும் உபநிஷத்துக்களுளொன்றாய் நரசிங்கத்தின் பெருமை கூறுவதாயுள்ள நரசிம்ஹதாபிநியிலன்றோ இருக்கவேண்டும். அப்படியில்லாமையால் புராண வசனம் பொய்யாயொழியுமன்றோ. ஈண்டு திருமால் கண்டபேரண்டமாக அவதரித்துச் சரபத்தைக் கிழித்தெறிந்தாரென்று நாரதீய முதலிய புராணங்களும், சிவனார் சருவதோமுகமெனு முருக்கொண்டு அக்கண்ட பேரண்டத்தை யழித்தார்; மேல் திருமால் சருவதோபத்திரமாக அவதரித்து அச்சருவதோமுகத்தை யழித்தாரென்று பிரபஞ்சசாரமெனு மந்திர சாஸ்திர முதலியனவும் பேசுமென வைணவர் கூறுவர். அங்ஙனமாயின், நரசிங்கமூர்த்திக்குஞ் சரபமூர்த்திக்குந் தனித்தனி யுபநிஷத்துக்களிருத்தல்போல அக்கண்டபேரண்டாதிகட்கு முபநிஷத்துக்களிருக்கலாமே. அப்படியில்லாமையாலும் சுருதி கூறுகின்றபடி சிவனார் மத்ஸ்யகூர்ம

வராகாதிகளின் வீறுபாட்டை யடக்கிய காலத்தில் அவற் றென்றுஞ் சிவனுரை இகலி நில்லா தடங்கினமையாலும், கண்டபேரண்டாதி அவதாரங்கள் கூறுதல் நரசிங்கத்தோடு பத்தவதாரமெனலைக் கடந்து அதிகமாகின்றமையாலும் அக் கண்டபேரண்டாதி விடயங்கூறும் புராணுதி வசனங்கள் உண்மையாக மாட்டா. சுருதி வசனத்தை புராண வசனங் கொண்டு வெல்லத்துணிவார் செய்கை இரும்பை எறும் பரிக்க முயல்வதையேயொக்கும். சுருதியிலில்லாத யாதா னுமொரு புது மகிமையை புராணங் கூறுமாயின் அங்ஙனமது பிரமாணமாகும். சுருதியிலிருக்கும் மகி மையை மறுக்கும் புராண வசனங்கள் பிரமாண மாகா. அவற்றை வியாசமா முனிவர் வாக்கியமெனக் கோடலும் வேதபாகியர் செய்கையேயாகும். ஆகலின் அவை மத்திய நுழைப்பு மாச்சரிய லிகிதங்களாம். தைத்திரியத்தில் "ஹரிம்ஹரந்தமநுயம்திதேவா: விச்வஸ்யேசாநம்வ்ருஷபம் மதீநாம்" என்று வருதற்குச் சரபமாய் வந்த சிவனைக் கோறல் புரிந்த் ஹரியைத் தேவர்கள் பின்றெடர்ந்தார்க ளென்று கூரேச விஜயத்தார் பொருள் கூறுவர். அது வெகு சுருதி விரோதமென்றும், "ஹரியெனு நரசிங்கத்தை ஹரித் தவரும் வித்தைகளை ஸ்வரூபமாக்கொண்ட விருஷபதேவரும் ஈசானருமாய் விளங்குஞ் சரபேசுரரைத் தேவர்கள் பின் றெடர்ந்தார்கள்" என்பதே மேற்சுருதியிற் புகழப்பட்ட ஈசானரைக் குறைவுபடுத்தாது கொள்ளுமேற்புடைப்பொரு ளென்று முணர்வ ருயர்ந்தோர். சரபத்தை வெல்லக் கண்ட பேரண்டம் வந்ததென்னும் அவ் வைணவர் கூற்று வழியே யும் அச்சரபத்தை நரசிங்கம் வெல்லமாட்டா தென்பதூஉம் வியக்தமாயிற்று. அக்கூரேச விஜயம் பூமியிலநேகர் பூஜிக் கிற கட்சியில் கண்ணமூர்த்தி கைலாசம் புக்கபோது அவ ரைச் சிவன் சிம்மாசனத்திருத்தி அவரிரடியுந் தன் தலையில் வைக்கும்படி பிரார்த்தித்ததைப் பாகவதங் கூறுமெனுஞ் செய்தி யெழுதப்பட்டுளது. பாரதவீர ருற்பத்தியாதிகளும், அப்பாரதப் போர் மூட்டுவித்து முடிக்கவந்த கண்ண்மூர்த்தி யுற்பத்தி முதலிய பலவுங் கூறுந் தலைநூல் பாரத மொன்றே

யாம். அந்நூல் துரோண பர்வத்தில் "ததோங்வபச்யத்கிரி சஸ்யவாமே ஸ்வாத்மாநமவ்யக்தமநந்தரூபம் ஸ்துவஸ்தமீசம் பகுபிர்ய சோபிகிப்ஸங்காஸி சக்ரார்பித சக்ரஹஸ்தம்" என்றெழும் வசனத்தாற் பரமசிவனுர் ஸ்ரீகண்ணர் செய்த தவங் கண்டெழுந்தருளிய அவதாரம் அச்சிவனுரது இடப்பக்கத்தில் சங்கசக்ரதாரராய் அநேக திவ்ய ஸ்தோத்திரங்களால் துதிசெய்துகொண்டிருந்த நாராயணரை அக்கண்ணர் கண்டு களிகூர்ந்தாரென்று பெறப்படுதற்கும், திருக்கைலேயில் ஸ்ரீ கண்ணரும் அருச்சுனரும் எண்ணிலாத ஸ்தோத்திரநமஸ்காரங்களாற் சிவனுரை வழிபட்டனரென்று அந்தத் துரோண பர்வந்தானே விளக்குதற்கும், அப்பாகவதக் கூற்று விரோதமாகும். மேலும், அக்கிருஷ்ணர் ஸ்ரீ உபமந்யுமுனிவரிடம் பாசுபததீக்ஷையில் திருவடிசூட்டு தீக்ஷை பெற்றுக் கிருதார்த்தரானதைப் பல் புராணங்கள் பகர்ந்தாங்கு அப்பாரதம் பகர்தற்கும் அக்கூற்று முரணும். இங்கே உமாபதியார் நாராயணரை நோக்குபு "நீர்மநுஷனுக வந்து என்னை யாராதித்துச் சர்வதேவ சிரேஷ்டம் பண்ணி நீரு மென்னிடம் வரம்பெறல் வேண்டுமென்று கேட்டபடி நாமெடுக்கும் மநுஷாவதாரங்களில் அப்படிச்செய்குது"மென நாராயணர் நவின்றதாக வராக புராணம் ருத்ரகீதை சொல்லும்; அவ் வரதானபாலனமாகக் கண்ணமூர்த்தி சிவனைப் பூஜித்து வரமும் பெற்றிருப்பாரெனச் சமாதானங் கூறலாமெனின், அவதார மூர்த்தி வழிபட்ட காலத்திற்றுனே மூலவிஷ்ணுவுஞ் சிவனைவழிபட்ட விஷயம் அத்துரோண பர்வத்திற் கேட்கப்படுதலால் அது பொருந்தாது. அரசனு யிருப்பானெருவனை அவனிஷ்டப்படி யவனது நாட்டுக் கிராம தேவதைகட் குரிய பறைகொட்டும் பறைய னெருவன் வணங்கி "அரசரேறே! நீர் என்னை வணங்கி என் வீட்டு இருளப்பசாமிக்கு மொருநாள் உரிய பறைகொட்டியென்னை யிராஜ சிரேஷ்டம் பண்ணவேண்டு" மென்று கேட்டால் அதற்கவ் வரசனிணங்கி யக்காரியஞ் செய்வானே? சுவபாவ விருத்தமான விஷயம் நடப்பதில்லையாதலால் அவ்வரதானபாலன வசனமுங் கற்பனையேயாம்.

இங்குச் சிவனை விஷ்ணு பூஜிப்பது நாடகமேன்னு மிடத்தும் அத்தானபாலன மழிவதோடு ஏனைத்தேவர் முனிவர் மநுடர் செய்கையும் அவ்வாறு கூறநேரிடுமாகலின் அது சால்பாகாது. ஆகலின் அப்போலிச் சமாதான வழியேயுஞ் சிவனுர்க்குச் சர்வதேவ சிரேஷ்டம் இயற்கையென்பதே சித்தித்தது. பரிக்ஷித்து மன்னனுடைய மகனாய் இராஜ்யபாரம் பண்ணிக்கொண்டிருந்த ஜனமேஜயனுக்கு வைசம்பாயனராற் கூறப்பட்டுப் பின்பு நைமிசாரண்ய முனிவர்கட்குச் சூதமுனிவராற் சொல்லப்பட்ட வியாசபாரதத்திற் பரிக்ஷித்து மரணமுதலியனவும் விளக்கப்பட்டன. இப்பாரதத்தையும் எளியமொழிகள் செறிந்த மற்றைப் புராணங்களையும் அருளிச்செய்த பின்னே ஓவாவுண்மை யுணர்ந்து விஷ்ணு பரமாகச் செவ்வனே செய்யப்பட்டது இப்பாகவதமெனவும், இஃதந்தப் பரிக்ஷித்து மன்னனுக்குச் சுக முனிவராற் சொல்லப்பட்டதெனவும் அவ்வடமொழிப் பாகவதங் கூறுவதா யிருக்கின்றது. அக்கூற்றே பழைய சரிதங்களோடு பலப்பல பொய்களும் புனையப்பட்டுள்ளது இப்பாகவதமென்பதை நிலைபேறு செய்யும் பாரதத்தின் பின்னர்த்தான் பாகவதமுண்டாயதென்பதை “ஜிஜ்ஞாஸிதம் ஸுஸம்பந்நமபிதேமஹாதத்புதம்| க்ருதவாந்பாரதம்யஸ்த்வம் ஸர்வார்தபரிப்ரும்ஹிதம்||” எனும் அப்பாகவத ஆரம்ப ௫-ம் அத்தியாயம் ௩-ம் சுலோகத்தினறிக. அருத்தம் - “மகதற்புதமுஞ் சம்பந்நமுமான பரமாத்துமாவை நன்கு விசாரித்து அர்த்தபுஷ்டியோடு பாரதம் உம்மாற் செய்யப்பட்டது” என்றும். இது வியாசரை நோக்கி நாரதர் கூறியதாயுள்ளது. ஈண்டுப் பாரதம் பகருமாறு மரணமாகிவிட்ட பரிக்ஷித்து மன்னனைப், பாகவதம் பகருமாறு பாகவதங் கேட்போனாக்கிக்கொண்டதும், பாகவதத்திற்கு முன்னே பாரத முண்டெனக்கொண்டதும்பொருந்தாதுநிற்றல் காண்க. என்றும் பொய் பொய்யே. இவ்வொன்றினாலேயே பாகவதரென்பார்க்கு இனிப்பாகவதமில்லை யென்பது தெள்ளிதன்றே.

(தொடரும்)